மலர் 14 இதழ் 1

NAVAMANI (Tamil Daily) MADRAS

REGD. NO. M 7897

Phone No. 76190/7619

பக்கம் 15 காசு விமானப் பதிப்பு 18 காசு

கம்யூனிஸ்டுகளுக்கு
கருணாநிதி
அழைப்பு
—3-ம் பக்கம்

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 19—9—73 புதன் வெளியூர் 20—9—73 வியாழன்



# காமராஜருடன் சந்திப்பு உண்டா? இந்திரா பேட்டி

பெங்களூர், செப். 19—தற்போதைய தமிழ்நாடு சுற்றுப்பிரயாணத்தின் போது காமராஜரை சந்திக்கும் உத்தேசம் தமக்கு இல்லை என்று பிரதமர் இந்திரா காந்தி கூறினர்.

நிருபர்களின் கேள்விக்கு பதிலளிக்கையில் பிரதமர் இந்திரா இவ்வாறு தெரிவித்தார்.

இன்று பெங்களூர் விமான நிலையத்தில் நிருபர்களுக்கு பிரதமர் இந்திரா காந்தி சில நிமிட நேரம் பேட்டி அளித்தார்.

"தமிழ்நாட்டில் தற்போது காமராஜரை சந்திப்பீர்களா?" என்று பிரதமரிடம் ஒரு நிருபர் கேட்டார். "அப்படி நான் நினைக்கவில்லை" என்று பிரதமர் பதிலளித்தார்.

"காங்கிரஸ் கட்சியில் சேருமாறு சோஷலிசக் கருத்து உடையவர்களுக்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பேசுகையில் நீங்கள் அழைப்புவிடுத்தீர்களே, அது பொதுவாக அனைவருக்கும் விடுக்கப்பட்ட வேண்டுகோளா அல்லது ஏதாவது ஒரு குறிப்பிட்ட நபருக்கு விடுக்கப்பட்ட வேண்டுகோளா" என்று பிரதமரிடம் மற்றொரு கேள்வி கேட்கப்பட்டது.

"காமராஜர் பற்றி நீங்கள் (நிருபர்) குறிப்பிடுவதாயிருந்தால், அவருக்கு நான் பகிரங்கமாக வேண்டுகோள் வெளியிட வேண்டிய அவசியம் இல்லை" என்று பிரதமர் பதில் கூறினர்.

காங்கிரஸ் கட்சியின் கருத்துக்களை ஏற்கிறவர்கள் அனைவருக்குமே அந்த அழைப்பு விடுக்கப்பட்டது என்றும் உத்தரபிரதேசம், மத்திய பிரதேசம் ஆகிய மாநிலங்களில் ஏராளமான சோஷலிஸ்டுகள், காங்கிரஸ் கட்சியில் சேர்ந்ததை வரவேற்க அந்தச் சந்தர்ப்பத்தை தாம் பயன்படுத்தியதாகவும் இந்திரா மேலும் கூறினர். மற்றும் ஏராளமான பேர் காங்கிரஸ் கட்சிக்கு வந்து கொண்டிருப்பதாக அவர் குறிப்பிட்டார்.

"தமிழ்நாட்டுக்கு நீங்கள் இப்போது விஜயம் செய்வதற்கு ஏதாவது விசேஷ முக்கியத்துவம் உண்டா?" என்று ஒரு நிருபர் கேட்டார். அதற்கு பிரதமர் இந்திரா பதில் கூறியதாவது:—

"பாம்பன் சாலை பாலத்திற்கு நான் அடிக்கல் நாட்டும் விழா நீண்ட காலத்திற்கு முன்பு நிர்ணயிக்கப்பட்டிருந்தது. கடந்த தடவை நான் சென்னைக்குச் சென்றபோது திரு. வி. ஜயமகும் உடல்நலக் குறைவாக இருந்த டி. டி. கே. வைப் பார்ப்பதற்காக அப்போது நான் போயிருந்தேன். எத்திராஜ் கல்லூரி மாணவிகளின் அழைப்பு நீண்டகாலமாகவே இருந்து வருகிறது" என்றார் இந்திரா.

## ஜனசங்க ஊழியர் 300 பேர் கைது

மதுரை, செப். 19—மதுரையில் இன்று ஜனசங்க ஊழியர்கள் சுமார் 300 பேர் கைது செய்யப்பட்டனர் என்று தமிழ்நாடு ஜனசங்கம் அறிவித்தது.

விலை உயர்வுக்கு கண்டனம் தெரிவிக்கும் வகையில் இன்று மதுரை விமான நிலையத்தில் பிரதமர் இந்திராகாந்திக்கு எதிராக கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டம் நடத்தப்படும் என்று இதற்கு முன்பு ஜனசங்கம் அறிவித்திருந்தது.

மதுரை நகர ஜனசங்கத் தலைவர் என். வி. சுப்பையர், செயலாளர் ஆர். வி. சேஷாசாரி ஆகியோர், கைது செய்யப்பட்டவர்களில் அடங்கியிருந்தனர்.

அவர்கள் கைது செய்யப்பட்டது குறித்து மதுரை மாவட்ட ஜனசங்கத் தலைவர் எஸ். கே. பாலகிருஷ்ணன் கண்டனம் தெரிவித்தார். அரசியல் கட்சிகளின் ஜனநாயக உரிமைகளை நசுக்குவதில் அரசு ஈடுபட்டுள்ளதாக அவர் குற்றஞ்சாட்டினர்.

## பெங்களூரில் இந்திரா

பெங்களூர், செப். 19—டெல்லியிலிருந்து விமான மூலம் மதுரைக்குச் செல்லும் வழியில் பிரதமர் இந்திரா காந்தி இன்று காலை பெங்களூருக்கு வந்து சேர்ந்தார்.

மைசூர் கவர்னர் சுகாதியா முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ், மந்திரிகள் உயர்தர அதிகாரிகள் முதலானோர் விமான நிலையத்தில் பிரதமரை வரவேற்றார்கள். அவருக்கு ஏராளமான மாலைகள் போடப்பட்டன.

பிரதமர் இந்திரா காந்தியுடன் அந்த விமானத்தில் மத்திய மந்திரி சுப்பிரமணியமும் வந்தார்.

15 நிமிட நேரம் தங்கிய பிறகு இருவரும் மதுரைக்குப் புறப்பட்டனர்.

மதுரையில் ஜனசங்க ஊழியர்கள் 300-க்கு மேற்பட்ட பேர் கைது செய்யப்பட்டதாக தமிழ்நாடு ஜனசங்கம் தெரிவித்தது.

அவர்கள் உடனே விடுதலை செய்யப்படவேண்டும் என்று தமிழ்நாடு ஜனசங்கம் கோரியுள்ளது.

## மதுரையில் இந்திராவுக்கு உற்சாக வரவேற்பு

மதுரை, செப். 19—பிரதமர் இந்திரா காந்தி பெங்களூரிலிருந்து இன்று காலை 11-30 மணிக்கு மதுரை வந்து சேர்ந்தார். பிரதமர் வந்த விசேஷ விமானப்படை விமானம் 5 நிமிடம் முன்னதாகவே மதுரை வந்தது.

விமான நிலையத்தில் பிரதமரை, கவர்னர் ஷா, கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் மதுரை மேயர் முத்து, தமிழக அரசு தலைமைச் செயலாளர் சபாநாயகம், கலெக்டர் சீதாராமதாஸ் ஆகியோர் வரவேற்றனர்.

உடனே 11-25 மணிக்கு பிரதமர் கடற்படை ஹெலிகாப்டர் மூலம் ராமேஸ்வரத்துக்குப் பயணமானர்.

ராமேஸ்வரத்தில் கோவிலுக்கு விஜயம் செய்துவிட்டு இன்று மாலை பாம்பன் பாலத்துக்கு அடிக்கல் நாட்டுவார்.

பிரதமருடன் மத்திய அமைச்சர் சுப்பிரமணியமும் வந்தார்.

விமான நிலையத்தில், புது காங்கிரஸ் பொதுச் செயலாளர் மரகதம் சந்திரசேகரும் பிரதமரை வரவேற்றார். தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ராமையா, மற்றும் பலர் பிரதமருக்கு மாலை அணிவித்தனர்.

இந்திராவை வரவேற்க சுமார் ஆயிரம் காங்கிரஸ் ஊழியர்களும் கூடியிருந்தனர்.

பாம்பன் பால அடிக்கல் நாட்டு விழா முடிந்ததும், காரைக்குடி அழகப்பா கல்லூரி வெள்ளி விழா நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார். இன்று இரவு 7-30 மணிக்கு காரைக்குடியில் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசுகிறார்.



சென்னை செம்பியத்தில் துப்புரவு இயக்கத்தை மந்திரி ராசாராம் ஆரம்பித்துவைத்தார்.

### கம்யூனிஸ்டு மகஜர் விவரம்

## இந்திராவிடம் கம்யூனிஸ்டு கட்சியின் 6 கோரிக்கைகள்

மதுரை, செப். 19—மதுரையில் இன்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பிரதமரிடம் தரப்பட்ட மகஜரில் 6 கோரிக்கைகளை வற்புறுத்தியிருக்கிறார்கள். கே. டி. கே. தங்கமணி; முருகானந்தம், வி. எஸ். காந்தி எஸ். பி. ஆண்டி; சண்முகம் ஆகிய ஐவரும் பிரதமரிடம் மகஜர் கொடுத்தார்கள்.

மகஜரில் கூறப்பட்டுஇருப்பதாவது:—

1. மத்திய—மாநில அரசுகள் சரியான நடவடிக்கை எடுக்காததால் விலைவாசி ஏறியிருக்கிறது. அதற்காக 15-ம் தேதி பந்த் நடத்தினோம். ஆகவே விலைவாசியைக் குறைக்க தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்.

2. அரிசி மொத்த வியாபாரத்தை அரசே ஏற்கவேண்டும். பாதுகாப்பு சட்டப்படி அத்தியாவசிய பண்டங்கள் விலையை நிர்ணயிக்கவேண்டும்.

3. தமிழகத்தில் உள்ள 30 லட்சம் நெசவாளர்களுக்கு நியாயவிலையில் நூல் கிடைக்க வேண்டும் நியாயவிலைக் கடைகள் மூலம் சிமெண்ட், உரம் முதலியவைகள் விநியோகம் செய்யப்படவேண்டும்.

4. மின்சார வாரியம் இயங்கும் விதம் பற்றி விசாரணை நடத்த வேண்டும்.

5. பொய் வழக்குகளை கம்யூனிஸ்ட் கட்சி, அ. தி. மு. க. வினர் மீது ஏராளமாகப் போட்டு இருக்கிறார்கள். அவைகள் வாபஸ் பெறப்படவேண்டும். 6. கருணாநிதி அமைச்சரவை மீதான விசாரணை கமிஷன் உடனடியாக நியமிக்கப்படவேண்டும்.

பதுக்கல் கொள்ளை லாபம் கலப்படம் செய்கிறவர்களை சிறையில் போடவேண்டும். என்று அந்த மகஜரில் தெரிவித்திருக்கிறார்கள்.

## பெட்ரோல் மீது வரி விதிப்பு அதிகாரம்: மேயர்கள் கோரிக்கை

புதுடெல்லி, செப். 19—மாநகராட்சி எல்லைக்குள் விற்கப்படும் பெட்ரோல் மீது செஸ் வரிவிதிக்க, மாநகராட்சிகளை அனுமதிக்க வேண்டுமென்று அ. இ. மேயர்கள் கமிட்டி கோரியுள்ளது.

நகரசபைகளுக்கான பொது விதிகளை வகுக்க, அ. இ. மேயர்கள் கவுன்சில், கமிட்டி ஒன்றை அமைத்திருந்தது.

இந்தக்கமிட்டியின் இரண்டு நாள் கூட்டம் 16-ந் தேதியன்று டெல்லியில் முடிவுற்றது.

மாநகராட்சிகளுக்கு கடன் வழங்குவதற்காக, நகராட்சிக் கார்ப்பரேஷன் ஒன்றை மத்திய அரசு ஏற்படுத்த வேண்டும் என்றும் கமிட்டி யோசனை கூறியுள்ளது.

மாநகராட்சி எல்லைகளில் விற்கப்படும் பெட்ரோலுக்கு செஸ்வரி விதிக்க தங்களை அனுமதிக்கவேண்டும் என்று கமிட்டியின் எல்லா உறுப்பினர்களும் ஏகமனதாக தீர்மானித்ததாக, கமிட்டித் தலைவரான பரோடா மேயர் எல். சி. எம். பட்டேல் கூறினர்.

## ராதாகிருஷ்ணனை சந்திப்பார் இந்திரா

சென்னை, செப். 16—நாளை சென்னைக்கு வரும் பிரதமர் இந்திராகாந்தி முன்னாள் ஜனாதிபதி ராதாகிருஷ்ணனை சந்தித்து உடல்நலம் விசாரிக்கிறார்.

நாளை பிற்பகல் 12-30 மணிக்கு அவர் ராதாகிருஷ்ணன் சிகிச்சை பெற்றுவரும் மருத்துவ விடுதிக்குச் சென்று உடல்நலம் விசாரிப்பார்.

### மனோகரன் எம். பி. புகார்

## "மதுரையில் பேரணி நடத்த அனுமதி மறுப்பு: 10 ஆயிரம் பேர் கைது"

மதுரை, செப். 19—கருணாநிதி அமைச்சரவை மீதுள்ள ஊழல் குற்றச்சாட்டுக்களை விசாரிக்க விசாரணைக் கமிஷனை உடனடியாக நியமிக்கக் கோரி இன்று மதுரையில் பிரதமரிடம் அண்ணா தி. மு. க. சார்பிலும் இந்தியக் கம்யூனிஸ்க் கட்சி சார்பிலும் தனித்தனியே மகஜர்கள் அளிக்கப்பட்டன.

## அ. தி. மு. க. மகஜர்

விசாரணைக் கமிஷன் அமைக்கப்படுவதில் காலதாமதம் ஆவதை அண்ணா தி. மு. கழகம் தனது மகஜரில் குறிப்பிட்டு "கருணாநிதிக்கும் அவருடைய மந்திரி சபைக்கும் நீங்கள் (இந்திரா) பாதுகாப்பு அளிப்பதாக மக்களிடையே எண்ணத்தை ஏற்படுத்த தமிழக முதலமைச்சர் இதை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்தி வருகிறார்" என்று கூறியுள்ளது.

அந்த மகஜரில் அவர்கள் முன்னர் எம். ஜி. ஆர். இரு மகஜர்களை அளித்ததை நினைவுபடுத்தி "இதுவரை ஒன்றும் நடக்கவில்லை. இந்த விஷயத்தில் உங்களுடைய மவுனம் வியப்பை அளிக்கிறது" என்று கூறியுள்ளனர்.

"விசாரணைக் கமிஷன் அமைக்க வேண்டும் என்ற கோரிக்கை ஒரு குறிப்பிட்ட கட்சி எழுப்பும் கோரிக்கை அல்ல; மாறாக தமிழக மக்கள் அனைவருடைய ஒருமித்த கோரிக்கையாகும்" திண்டுக்கல் தேர்தலில் அ. தி. மு. க. பெற்ற வெற்றி இதற்கு அத்தாட்சியாகும்" என்றும் அந்த மகஜரில் கூறப்பட்டுள்ளது.

"எனவே தமிழக மக்களின் நியாயமான கோரிக்கையை ஏற்க ஆவன செய்யவேண்டும்" என்று அவர்கள் தங்கள் மகஜரில் கேட்டுக்கொண்டுள்ளனர்.

விலைவாசி உயர்வு பற்றியும் அண்ணா தி. மு. க. வும் மற்ற எதிர்க்கட்சிகளும் நடத்திய பந்த் போராட்டம் பற்றியும் அண்ணா தி. மு. க. மகஜரில் குறிப்பிட்டுள்ளது.

மதுரையில் விமான நிலையத்திற்கு ஊர்வலமாகச் சென்று மகஜர் கொடுக்க அண்ணா தி. மு. க. திட்டமிட்டிருந்தது.

ஆனால் இன்று மதுரையில் ஊர்வலம் நடத்த போலீசார் அனுமதி தரவில்லை.

### மனோகரன் புகார்

"ஊர்வலத்தில் கலந்து கொள்ளவந்த அண்ணா திமுக இந்தியக் கம்யூனிஸ்ட் தொண்டர்கள் ஆங்காங்கு கும்பல் கும்பலாக கைது செய்யப்பட்டனர். நேற்று இரவுமட்டும் 2 ஆயிரம்பேர் கைது செய்யப்பட்டனர். இன்று நடுபகல்வரை 10,000-க்கு மேற்பட்டவர்களை போலீசார் கைது செய்தனர்" என்று அண்ணாதிமுக அலுவலகத்தில் மனோகரனும், கே. ஏ கிருஷ்ணசாமியும் புகார் கூறியுள்ளனர்.

### அனுமதி மறுப்பு

பேரணி நடத்த கலெக்டரிடம் மாயத்தேவர் தொடர்பு கொண்டு அனுமதி கேட்டதாகவும், அவர் இதற்கு உதவ மறுத்ததாகவும் அதற்குப் பிறகு ஐஜியுடன் தொடர்பு கொண்டும் அவரும் மறுத்துவிட்டதாகவும் மனோகரன் சென்னையில் அறிவித்தார்.

அண்ணாதி.மு.க. சார்பிலான மகஜரை மாயத்தேவர் (எம். பி.) பாலன் (எம். பி.), எட்மண்ட் (எம். எல். ஏ.) காளிமுத்து (எம். எல். ஏ.) ஆகியோர் பிரதமர் இந்திரா விடம் கொடுத்தனர்.

முருகானந்தம் (எம். பி.) கே. டி. கே. தங்கமணி ஆகிய இருவரும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பிலான மகஜரை பிரதமரிடம் கொடுத்தனர்.

பிரதமர் வந்து இறங்கியதும் பிரமுகர்கள் அறிமுகம் நடந்தது. பிரதமருக்கு மாயத்தேவர் அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்.

அப்போது மாயத்தேவர் பிரதமரிடம் "விசாரணைக் கமிஷன் கோரும்" மகஜரை கொடுத்தார். பிரதமரும் அதை சிரித்த வண்ணம் பெற்றுக் கொண்டார்.

## ஐ. நா. சபையில் ஜெர்மன் நாடுகள்

நியூயார்க், செப். 19—இரண்டாம் உலகப் போரின் விளைவாக ஜெர்மனி இரண்டாகப் பிரிக்கப்பட்டதைத் தொடர்ந்து தோன்றிய கிழக்கு ஜெர்மனி, மேற்கு ஜெர்மனி ஆகிய இருநாடுகளும் இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது ஐ. நா. சபையில் உறுப்பினர் நாடுகளாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டுள்ளன.

அமெரிக்கா ரஷ்யா இடையிலான தகராறு காரணமாக கிழக்கு ஜெர்மனியும், மேற்கு ஜெர்மனியும் இதுவரை ஐ. நா. சபையில் இடம் பெற முடியவில்லை.

ஐ. நா. அமைப்பு துவக்கப்பட்டு 28 ஆண்டுகள் ஆகின்றன.

ஐ. நா. வின் பொதுச்சபை கூட்டம் நேற்று துவங்கியது. அப்போது பகாமாஸ் நாடும் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டது. இதைச் சேர்த்து இப்போது ஐ. நா. உறுப்பினர் நாடுகளின் எண்ணிக்கை 135 ஆக உயர்ந்துள்ளது.

ஐ. நா. பொதுச் சபைக் கூட்டம் துவங்கியபோது தென் அமெரிக்க ஈக்வடார் நாட்டின் பிரதிநிதி பெனிட்ஸ் சபைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பொதுச் சபைக் கூட்டம் டிசம்பர் 18-ந் தேதிவரை நடைபெறும்.

## நிகழ்ச்சிகள் ரேடியோவில் ஒலிபரப்பு

சென்னை, செப். 19—பிரதமர் இந்திரா காந்தியின் தமிழ்நாடு சுற்றுப்பயண நிகழ்ச்சி தொகுப்பை ஆல் இந்தியா ரேடியோவின் சென்னை நிலையம் ஒலிபரப்பும். சென்னை ஏ—வரிசையில் இன்றும், நாளையும் (19, 20) இரவு 10 மணிக்கு இந்த நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படும்.

## சூடான ஆவியிலிருந்து மின்சார உற்பத்தி

அகமதாபாத், செப். 19—சூடான ஆவியிலிருந்து நேரிடையாக மின்சாரம் உற்பத்தி செய்வதற்கான மின்சார உற்பத்தி யந்திரத்துக்கு இந்திய விஞ்ஞானிகள் வடிவமைத்துள்ளனர்.

குஜராத் மின்சார வாரியத்தின் மாதாந்திர சஞ்சிகையில் இத்தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இது தற்போது உள்ள ... மின்சார ஜெனரேட்டரைப் போன்றதாகும்.

இந்திய விஞ்ஞானிகள் உருவாக்கியுள்ள மின்சார உற்பத்தி யந்திரம் பெரும் இடத்தை அடைத்துக் கொள்ளாதது. ... மின்சார உற்பத்தி யந்திரத்தில் உள்ள டர்பைன் போன்ற இயக்கப் பகுதிகள் எதுவும் இதில் கிடையாது. இப்புதிய யந்திரத்தை பயன்படுத்தினால் மின்சார உற்பத்திச்செலவு 5 முதல் 25 சதவிகிதம் குறையும்.

இப்புதிய யந்திரத்தைத் தயாரிக்கும் பணியை விரைவில் மேற்கொள்ள வேண்டும் என்று தேசிய விஞ்ஞான தொழில் நுட்பக்கமிட்டி நியமித்த நிபுணர் குழு சிபாரிசு செய்துள்ளது.

## சினிமா செய்திகள்
—4-ம் பக்கம்

ரசிகர் சங்கம் தேவையா?
நடிகர்கள் அரசியலில் ஈடுபடலாமா?



என்னை 4-ம் பக்கம் சந்தியுங்கள்

# வானொலி

(20—9—73)

வியாழன்

## சென்னை—1

(41... மீட்டர்)

காலை

5-55 மங்கள இசை
6-04 குறளமுதம்
6-10 துதிப்பாடல்கள்
6-35 டி. என். ராஜரத்தினம் —நாதஸ்வரம்
7-25 இசை மலர்
7-45 கே. ஆர். கணபதி —புல்லாங்குழல்
9-04 திரைகானம்

பகல்

12-04 என். காந்திமதி —பாட்டு
12-50 மெல்லிசை
1-04 திரைகானம்
2-30 என். காந்திமதி —பாட்டு
3-04 பாட்டு

மாலை

5-04 டி. வி. விஸ்வநாதன் —பாட்டு
6-15 வாத்திய கோஷ்டி
7-30 விவசாயிகளுக்கு
8-04 எம். ஆனந்தவல்லி பாலசரஸ்வதி —பாட்டு
8-30 நிர்மலா சுந்தரராஜன் —பாட்டு
9-15 சமஸ்கிருத நிகழ்ச்சி
9-30 குடிநீர் வடிகால் —சித்திரம்
10-30 இன்னிசை—வயலின்
11-04 ஒலிபரப்பு முடிவு

## சென்னை-2

(3... மீட்டர்)

காலை

6-55 மங்கள இசை
7-25 தபால் மூலம் கல்வி வானொலி பல்கலைக் கழகம்
7-45 பக்திப் பாடல்கள்

பகல்

1-00 அறிவிப்புகள் (ஆங்கிலம்)
1-04 மேற்கத்திய இசை

மாலை

4-15 விளையாட்டு வர்ணனை—ஆய்வலம
7-15 இளையபாதம்
8-15 வானொலிச்செய்திச்சுருள் (ஆங்கிலம்)
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

## திருச்சி

(319-1 மீட்டர்)

காலை

6-00 மங்கள இசை
6-10 அறவுரை
6-15 பாமாலை
6-30 விவசாயிகளுக்காக
6-40 துதிப்பாடல்கள்
7-25 ஆர். சுவாமிநாதன் —பாட்டு
8-20 தேசபக்திப் பாடல்கள்
8-30 கோடகநல்லூர் எஸ். சுந்தரமய்யர்—வயலின்

பகல்

12-04 ஆர். சுவாமிநாதன் —பாட்டு
12-50 தேசபக்திப்பாடல்கள்
1-04 திரைப்பட இசை
1-30 கோடகநல்லூர் எஸ். சுந்தரமய்யர் வயலின்
2-10 இசைமஞ்சரி

மாலை

5-30 மெல்லிசைக் கதம்பம்
6-10 திரைப்பட இசை
6-45 கிராம சமுதாயம்
7-30 விவசாயிகளுக்கு
8-00 இளைஞர் உலகம்
9-15 விஞ்ஞான உயர்கல்வ
9-30 உஷார் —சொற்சித்திரம்
10-30 ஒலிபரப்பு முடிவு

ஆங்கிலத்தில் செய்தி காலை 6-02, 7-02, 8-10, 9-02 பிற்பகல் 12-02, 1-02, 2-00 3-02; மாலை 5-02, 6-02, இரவு 7-02, 8-02, 9-00, 11-02

தமிழில் செய்தி காலை 7-15, பிற்பகல் 12-40; இரவு 7-15; மாநிலச் செய்திகள் பிற்பகல் 12-30, மாலை 6-30.

## வர்த்தக ஒலிபரப்பு

விவிதபாரதி

சென்னை (193.5 மீட்டர்)

திருச்சி (202.7 மீட்டர்)

காலை 9-30—10-00 உங்கள் விருப்பம்

பகல் 2-00—2-30 திரை அமுதம்

மாலை 5-30—6-30 மங்கை இசை

இரவு 7-15—9-00 மதன் கிண்ணம்

இரவு 9-15— 9-30 "என்னடி ராக்கம்மா" —மேடைநாடகம் பகுதி-7

# தி. மு. கழகத்தில் சேர கம்யூனிஸ்டு ஊழியருக்கு கருணநிதி அழைப்பு

ராமநாதபுரம், செப். 19—கம்யூனிஸ்டு கட்சியில் லட்சியப் பிடிப்பு உள்ள இளைஞர்கள், தி. மு. கழகத்தில் சேர முன்வரவேண்டும் என்று முதலமைச்சர் கருணநிதி அழைப்பு விடுத்தார்.

கம்யூனிஸ்டு கொள்கைகள் பலவற்றை தி. மு. கழகம் நிறைவேற்றி வருகிறது என்று அவர் சுட்டிக் காட்டினர்.

ராமநாதபுரத்தில் நள்ளிரவில் நடந்த பொதுக்கூட்டத்தில் முதலமைச்சர் பேசினர்.

கருணநிதி கூறியதாவது—

திராவிட முன்னேற்றக் கழகம்தான் உண்மையான கம்யூனிஸ்ட் கட்சி என்று அண்ணா சொன்னர். அவர் கூறிய வாறு கழகம் பொதுவுடைமை கொள்கைகள் வெற்றி பெறுவதற்கான திட்டங்களை செயல்படுத்தி வருகிறது. இதன் காரணமாக பொதுவுடைமைக் கட்சியில் உள்ள நண்பர் சுப்பு போன்ற துடிப்புள்ள இளைஞர்கள் பொதுவுடைமைக் கொள்கைகளை நிறைவேற்றுகின்ற கழகத்திற்கு அங்கிருந்து வந்திருக்கிறார்கள்.

### சுப்பு இல்லாத கம்யூனிஸ்ட் கட்சி

மதுரையில் நான் பேசும்போது சொன்னேன்; உப்பில்லாப் பண்டம் குப்பையிலே என்பார்கள்; அதுபோல தான் சுப்பு இல்லாக் கம்யூனிஸ்ட் கட்சியும் என்று சொன்னேன். இதில் உள்ள நுணுக்கங்களைப் புரிந்துகொண்டு பேசுகிறவர்கள்—தர்க்க ரீதியாகவாதாட வல்லவர்கள் இன்றையதினம் கம்யூனிஸ்ட் கட்சியில்எவரும் கிடையாது.

தமிழக அரசின் மீது எங்கள் மீது களங்கம் கற்பிக்கவேண்டும் என்ற நிலையில் மற்றகட்சிகள் முயன்று வருகின்றன. அவர்களும் தனிப்பட்ட முறையில் அமைச்சர்களைப் பற்றி தரக்குறைவாகப் பேசுகிறார்களே தவிர, அரசியல் ரீதியாக பேசுபவர்கள்எவரும் இல்லை. இந்த தப்புப் பிரச்சாரத்தையும் முறியடிக்க கழகம் முற்பட்டுள்ளது.

### அழைப்பு

நல்ல சமயமடா, இதை நழுவ விடாதே, என்று தண்டபாணி தேசிகர் பாடிய பாட்டு இன்று என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அந்த பாட்டிற்கேற்ப பொதுவுடைமைக் கட்சியில் இருக்கின்ற நல்ல இலட்சியப் பிடிப்புள்ள இளைஞர்கள் எல்லாம் தி. மு. கழகத்தில் வந்து சேர வேண்டும்.

ஏன் வரவேண்டும்? என்பதற்குரிய காரணங்களைச் சொல்லாமல் அழைக்கவில்லை.

காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் பெரிய நிலப்பிரபுகளுக்கு ஆயிரக்கணக்கான ஏக்கர்களை, கரும்புத் தோட்டம் என்றும் மேய்ச்சல் காடுகள் என்றும் ஒதுக்கி விதிவிலக்கு அளித்திருந்தார்கள்; அந்த விதிவிலக்குகளையெல்லாம் தி. மு. க. ஆட்சி ஒன்றுதான் பொதுவுடைமை சித்தாந்தத்தோடு ரத்து செய்த ஆட்சியாகும்.

30 ஸ்டாண்டர்ட் ஏக்கரா என்பதை 15ஸ்டாண்டர்ட் ஏக்கரா என்று குறைத்த ஆட்சியும் தி. மு. கழக ஆட்சிதான்.

இன்றைக்கு பேருந்துகளையெல்லாம் நாட்டுடைமையாக்கும் சட்டம் கொண்டு வந்துள்ள சமதர்ம திட்டமுள்ள ஆட்சியும் தி. மு. க. கட்சியின் ஆட்சிதான்; ஆகவே தான் உண்மையான பொதுவுடைமை சித்தாந்தத்தில் நம்பிக்கை கொண்ட ஆட்சி திராவிட முன்னேற்றக் கழக ஆட்சிதான்" என்றார் கருணநிதி.

# லாரிகள் மோதல்: 3 பேர் மரணம்

சென்னை, செ. 19—திண்டிவனம் தாலுகா செந்தூர் என்ற இடத்தில் இரண்டு லாரிகள் நேருக்கு நேர் மோதியதால் 3 பேர் ஸ்தலத்திலேயே மரணமடைந்தனர்.

ஒரு லாரி ரசாயன உர மூட்டைகளை ஏற்றிக் கொண்டு சென்னையில் இருந்து சேலத்துக்கு சென்று கொண்டிருந்தது. எதிரே வந்த லாரி கோவில்பட்டியில் இருந்து ...த்தை ஏற்றி வந்து கொண்டிருந்தது.

செந்தூரில் ஒரு திருப்பத்தில் விபத்து ஏற்பட்டது.

ரசாயன உரமூட்டைகளில் சிக்கிக்கொண்டு 3 பேர் இறந்தனர். மற்றும் 6 பேருக்கு காயம். இரண்டு லாரிகளும் பலமாக சேதமடைந்தன. தகவல் கிடைத்ததும் போலீசார் ஸ்தலத்துக்கு விரைந்து சடலங்களை திண்டிவனம் ஆஸ்பத்திரிக்கு பரிசோதனைக்காக அனுப்பினர். காயம்பட்டவர்களும் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கின்றனர்.

மரணமடைந்த 3 பேரும் விழுப்புரம் மதகரிபட்டு சந்தைக்காக சென்றுகொண்டிருந்தவர்களாம். பி. கண்ணன் (வயது 40), பி. இரணியன் (வயது 55) காத்தவராயன் (வயது 55) ஆகிய மூவரும் இறந்தவர்களாவர்.

சோளம் ஏற்றிவந்த லாரி டிரைவர் மீது போலீசார் வழக்கு ஒன்றையும் பதிவு செய்திருக்கின்றனர்.

உ. பி. டாக்டர்கள் வேலை நிறுத்தம்

# 1250 புதிய டாக்டர்களை நியமிக்க அரசு முடிவு

லட்சுமணபுரி, செப். 19—உத்தரப்பிரதேச டாக்டர்கள் நேற்று ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம்செய்தனர். 4 ஆயிரம் டாக்டர்கள் இதில் கலந்துகொண்டனர். இந்த பாக்... ...டையில் மேலும் 4 நாட்கள் வேலை நிறுத்தம் செய்யப்போவதாக டாக்டர்கள் அறிவித்துள்ளனர்.

இந்த நிலைமையை சமாளிக்க புதிதாக 1250 டாக்டர்கள் நியமிப்பது என்று உ. பி. அரசு முடிவு செய்தது.

காசநோய், மனோதத்துவம் போன்ற பல பிரிவு டாக்டர்களும் நியமிக்கப்படுவர் என்று அரசு கூறியிருக்கிறது.

ஐ. ஏ. எஸ். அதிகாரிகளைப் போன்ற சம்பளம், அந்தஸ்து உட்பட 9 கோரிக்கைகளை வற்புறுத்தி டாக்டர்கள் வேலைநிறுத்தம் செய்தனர். இவர்களுடன் பயிற்சி டாக்டர்கள் 700 பேரும் அடையாள வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டனர்.

### நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், செப். 18—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 83 00 |
| முடிவு விலை | 83 00 |

ஹரியானா முதலமைச்சர்மீது

# ஊழல் புகார் எதிரொலி: பிரதமருக்கு டெல்லி ஹைகோர்ட் நோட்டீஸ்

புதுடெல்லி, செப். 19—அரியானா முதலமைச்சர் பன்சிலால் மீது விசாரணை கமிஷன் அமைக்காதது சம்பந்தமாக பிரதமருக்கும், மத்திய அரசுக்கும் டெல்லி ஹைகோர்ட் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறது.

அரியானா முதலமைச்சர் பன்சிலால் மீது லஞ்ச ஊழல் புகார்களைக் கூறி, ...து குறித்து விசாரிக்க கமிஷன் அமைக்க வேண்டும் என்று வற்புறுத்தி பகவத் தயாள் சர்மா உட்பட எம். பி.க்கள் பலர் ஜனாதிபதியிடம் மனு கொடுத்திருந்தனர்.

இந்தக்கோரிக்கையை, மத்திய அரசு நிராகரித்து உத்தரவு இட்டிருந்தது.

இந்த உத்தரவு செல்லாது என்று சர்மா டெல்லி ஹைகோர்ட்டில் ஒரு மனு தாக்கல் செய்திருக்கிறார்.

மத்திய அரசின் உத்தரவு ... துஷ்பிரயோக... ...காதது செய்யுமாறும் சர்மா தனது மனுவில் கூறியிருக்கிறார்.

இந்த மனுவை ஏன் விசாரணைக்கு ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பதற்கு அக்டோபர் 31-ந் தேதிக்குள் காரணம் காட்டுமாறு பிரதமர் இந்திரா காந்தி, அரியானா முதலமைச்சர் பன்சிலால், மத்திய உள்துறை துணை அமைச்சர் மிர்தா ஆகியோருக்கும், மத்திய அரசுக்கும் டெல்லி ஹைகோர்ட் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறது.

அரியானாவின் ஒரு பிரதிநிதி என்ற முறையில, அங்கு எந்த அமைச்சரும் சுயநலத்துக்காக தனது அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்யாமலும் மாநில நிர்வாகம் நாணயமாக நடக்குமாறும் பார்த்துக்கொள்ளுவதில் நமக்கு அக்கறை இருக்கிறது என்று சர்மா கூறினர்.

பிரதமர் இந்திராவின் மகன் சஞ்சய் காந்தியின் சிறிய கார் தொழிற்சாலைக்கு நில ஆர்ஜிதம்செய்த ஊழல், மின்சார வாரியப் பணம் கையாடியது, ஊழியர் தேர்வுகளில் அதிகார துஷ்பிரயோகம் செய்தது போன்ற பல புகார்கள், தான் ஜனாதிபதியிடம் கொடுத்த மகஜரில் அடங்கியிருப்பதாக சர்மா கூறினர்.

# அண்ணா கூறிய இரட்டை வேடம்

ராமநாதபுரம், செப். 19—"இரட்டை வேடம் போடாதே" என்று முன்பு ஒரு சமயம் எம். ஜி. ஆரிடம் அண்ணா கூறியதாக முதலமைச்சர் கருணநிதி சூசகமாக குறிப்பிட்டார்.

ராமநாதபுரம் கூட்டத்தில் பேசுகையில் கருணநிதி சொன்னதாவது—

விற்பனை வரியைப் போட்டால், வியாபாரிகளைப் பாதிக்காது, வாங்குகிற பொதுமக்களை அல்லவா பாதிக்கும். ஆகவே விற்பனை வரி கூடாது என்று சட்டசபையில சிலர் பேசுகிறார்கள், அந்த விற்பனை வரியை ரத்துசெய்தால், 'வியாபாரிகளுக்கு அல்லவா லாபம்' என்று சொல்கிறார்கள், ஏன் இந்த இரட்டை நாக்கு?

ஏதோ கனிமரவுக்குப் போட்ட வரியை ரத்துசெய்ய தி. மு. க. முன்வரவில்லை என்று சென்னை கடற்கரை கூட்டத்தில் தற்போது புது கட்சி தலைவராக உள்ள நடிகர் முன்பு பேசியபோது அவரை அண்ணா அழைத்து, "இந்த இரட்டை வேடத்தை யெல்லாம் பெட்டியோடு வைத்துக்கொள்! அரசியலிலே கொண்டுவராதே" என்று எச்சரித்தார். இவ்வாறு கருணநிதி பேசினர்.

### ரத்தத்தை ஆராய புதுக் கருவி கண்டுபிடிப்பு

புதுடெல்லி; செப். 19—நோயாளிகளின் ரத்தத்தில் ஆக்ஸிஜன் எவ்வளவு இருக்கிறது கரியமில வாயு எவ்வளவு இருக்கிறது என்பதை உடனே காட்டிவிடக்கூடிய மின்னணுக் கருவி ஒன்றை சென்னையில் உள்ள மத்திய விஞ்ஞானக்கருவி அமைப்பு உருவாக்கியுள்ளது.

ரத்த பிளாஸ்மாவில்உள்ள ...பொருள்களை ஆராய்ந்து அறிந்துகூறக்கூடிய மற்றொரு கருவியையும் அந்த அமைப்பு உருவாக்கியுள்ளது.

பெங்களூரில்

# காமராஜர் பிறந்த நாள் விழாவில் சிவாஜி கணேசன் பேச்சு

பெங்களூர், செப். 19—நாட்டின் நெருக்கடியான இந்த நேரத்தில் காமராஜர் போன்ற தலைவர்களின் சேவை நாட்டுக்குத் தேவை என்று பெங்களூரில காமராஜர் பிறந்த தின விழாவில் பேசுகையில் சிவாஜி கணேசன் கூறினர்.

விழா பெங்களூரில் ஸ்ரீராமபுரத்தில் நடந்தது. சிவாஜி கணேசன் மேலும் பேசுகையில் "மக்களின் நம்பிக்கையைப்பெற்ற காமராஜர் போன்றவர்களால்தான் நாட்டில் சுபிட்சத்தை ஏற்படுத்த முடியும்" என்றார்.

இந்த விழாவுக்கு மைசூர் பழைய காங்கிரஸ் தலைவர் வீரேந்திரபாடீல் தலைமை வகித்தார்.

அண்ணா குடும்பத்திற்கு

# திமுக நிதி உதவி பற்றி எம்ஜி ஆர்.

சென்னை, செப். 19—அண்ணாவின் குடும்பத்திற்கு தி. மு. கழகம் கொடுத்துள்ள நிதி உதவி குறித்து தி. மு. கழகத் தலைவர் கருணநிதிக்கு கடிதம் ஒன்றை அ. தி. மு. க. பொருளாளர் எழுதி இருக்கிறார் என்று எம். ஜி. ஆர். தெரிவித்தார்.

வந்து ரசீதை காட்டி பணம் வாங்கிச் செல்கிறீர்களா? அல்லது நாங்கள் வந்து தரவா? எப்போது வரலாம்? என்று அதில் அவர் கேட்டு இருக்கிறார் என்றார் எம்.ஜி.ஆர்.

# காங்கிரஸ்கொள்கைகளை எதிர்த்தார்: தினேஷ்சிங் மீது 4 குற்றச்சாட்டுகள்

புதுடெல்லி, செப். 19—நிலச் சீர்திருத்தத்தையும் கோதுமை வர்த்தகத்தை அரசு மேற்கொள்வதையும் எதிர்த்துப் பேசியதாகவும், தினேஷ்சிங் காங்கிரசிலிருந்து சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறார்,

தினேஷ் சிங்கின் நடவடிக்கைகள் குறித்து, எம். பி.க்கள் சிலர், காங்கிரஸ் தலைவர் சர்மாவுக்கு புகார் கடிதம் அனுப்பியிருக்கின்றனர். இக்கடிதத்தின் அடிப்படையிலேயே கட்சியிலிருந்து தினேஷ் சிங் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறார். இந்தக்கடிதங்கள் நேற்று தினேஷ் சிங்குக்கு அனுப்பப்பட்டன.

பார்லிமெண்ட் மத்திய மண்டபத்தில் கட்சித்தலைமையை தினேஷ்சிங் இழிவுபடுத்திப் பேசியதாகவும், நிலச்சீர்திருத்தம், கோதுமை மொத்த வர்த்தகத்தை அரசு மேற்கொள்ளுதல் போன்ற திட்டங்களை குறை கூறி பேசியதாகவும், எம். பி.க்கள் எழுதிய கடிதங்களில் புகார் கூறப்பட்டிருந்தன. உன்னி கிருஷ்ணன், மற்றும் பல எம்.பி.க்கள் இக்கடிதங்களை எழுதியிருக்கின்றனர்.

எதிர்க்கட்சியைச் சேர்ந்த எம். பி.க்கள் பலருடன் தினேஷ் சிங் கலந்து பேசியதாகவும் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறது.

இக் குற்றச்சாட்டுக்களுக்கும் பதிலளிக்க தினேஷ் சிங்குக்கு 2 வார கால அவகாசம் தரப்பட்டிருக்கிறது.

இப்புகார்கள் பற்றி கருத்து எதுவும்கூற தினேஷ் சிங் மறுத்துவிட்டார்; விரைவில் இதற்குப் பதிலளிக்கப்படும் என்றார் அவர்.

பிரதமரை எதிர்த்து தினேஷ்சிங் பேசியதாகவும், அப்பேச்சை உன்னிகிருஷ்ணன் டேப்பில் பதிவுசெய்து வைத்திருப்பதாகவும் ஒரு செய்தி வெளியாகியிருந்தது. இச்செய்தியை உன்னிகிருஷ்ணன் மறுத்தார்.

# 'பாகிஸ்தானைகாப்போம்' பூட்டோவிடம் நிக்சன் உறுதிமொழி

வாஷிங்டன்,செப். 19—"பாகிஸ்தானின் சுதந்திரத்தைக் காப்பது அமெரிக்காவின் முக்கியமான தொரு கொள்கையாக இருந்து வரும்" என்று அமெரிக்கா சென்றுள்ள பாகிஸ்தான் பிரதமர் பூட்டோவிடம் அமெரிக்க ஜனாதிபதி நிக்சன் உறுதி அளித்துள்ளார்.

வாஷிங்டனில் பிரதமர் பூட்டோ ஜனாதிபதி நிக்சனை சந்தித்தார்.

அப்போது அவரை வரவேற்றுப் பேசுகையில் நிக்சன் இவ்வாறு சொன்னர்.

நிக்சன் மேலும் பேசுகையில் சமீப மாதங்களில் ... சொல்லப்போனால் சமீப ஆண்டுகளில் பாகிஸ்தான் கஷ்டமானபிரச்னைகளை சமாளிக்க நேரிட்ட போது எங்கள் இதயம உங்கள் பால் இருந்தது" என்றும் நிக்சன் சொன்னர்.

"போர் ஆகட்டும், இயற்கையின் சீற்றம் ஆகட்டும், பூட்டோவின் தலைமையின் கீழ் பாகிஸ்தான் மக்கள் தீரத்துடன் நின்று அவற்றைச் சமாளித்து மீண்டதோடு மட்டுமல்லாமல் இறுதியில் முன்னைவிட அதிக பலத்தைப் பெற்றவராயினர்" என்றார் நிக்சன்.

பாகிஸ்தான்—அமெரிக்கா இடையிலான உறவுகள் பற்றியும் இந்திய துணைக் கண்டத்திலும் ஆசியாவிலும் சமாதானத்தை ஏற்படுத்த அமெரிக்கா அளிக்கக் கூடிய பங்கு பற்றியும் உலகப் பிரச்னைகள் பற்றியும் பூட்டோவுடன் விவாதிக்கப் போவதாக நிக்சன் சொன்னர்.

### பூட்டோ பேச்சு

வரவேற்புக்குப் பதிலளித்து பூட்டோ பேசுகையில் இந்தியாவை மறைமுகமாகத் தாக்கினர்:

பாகிஸ்தான்—அமெரிக்கா இடையே எப்போதும் "சங்கடமில்லாத கருத்துப் பரிமாற்றங்கள் இருந்து வந்துள்ளன" என்று பூட்டோ குறிப்பிட்டு விட்டு இந்தியாவை மறைமுகமாகத்தவிக்கும் வகையில், "நல்ல வேளையாக நமது உறவுகள் நம்மிடம் தான் உயர்ந்தவர் என்ற மனப்போக்கில் தார்மீகப் போதனையும் புத்திமதியும் கூறுவது இருக்கவில்லை" என்றார்.

வங்காளதேஷ் போரின் போது நீங்கள் (நிக்சன்) பாகிஸ்தானைச் சார்ந்து நின்றதாக நிறையப் புகார் கூறப்பட்டது ஆனால் உண்மையில் நீங்கள் நீதி, நியாயம் ஆகியவற்றின் பக்கமேசார்ந்து நின்றீர்கள்" என்றும் பூட்டோ சொன்னர்.

பூட்டோவும், நிக்சனும் சமாதானம் பற்றிக் குறிப்பிட்ட போதிலும், இந்தியத் துணைக்கண்டத்தில் சமாதானத்தை ஏற்படுத்துவதற்காக இந்தியா—பாகிஸ்தான் இடையே கையெழுத்தான எப்பந்தம் பற்றி இரு தலைவர்களும் ஒரு வார்த்தை கூடக் கூறவில்லை

### பூட்டோ நோக்கம்

அமெரிக்காவிடமிருந்து பொருளாதார உதவி பெறுவதும், வெள்ள நிவாரண பணிக்கு மேலும் பணம் பெறுவதும் அவற்றை விட முக்கியமாக அமெரிக்காவிடமிருந்து ஆயுத உதவி பெறுவதும் தான் பூட்டோ அமெரிக்கா வந்துள்ளதன் நோக்கமாகும்.

வரவேற்பு வைபவத்துக்குப் பிறகு பூட்டோவும் நிக்சனும் பேச்சுவார்த்தைகளைத் துவக்கினர்.

# பீகார் முதல்வர் வீட்டு முன் கேரோ

பாட்னா, செப். 19—பாட்னா நகரில் சுமார் 2000 மார்க்சிஸ்ட் ஊழியர்களும் கிசான் சபாவைச் சேர்ந்த ஊழியர்களும், மாநில முதல்வர் அப்துல் கபூரின் வீட்டைச் சூழ்ந்து கொண்டு "கேரோ" போராட்டம் நடத்தினர்; அவர்களில் 10 பேரை போலீசார் கைது செய்தனர்.

கேரோ போராட்டம் நடந்தபோது முதல்வர் வீட்டில் இல்லை. வெளியூர் போய் இருந்தார்.

விலைவாசியைக் குறைக்க வேண்டும்; வேலையற்றோருக்கு வேலை அளிக்கவேண்டும்; நியாயவிலையில் அத்தியாவசியப் பொருட்களை அளிக்க வேண்டும் என்று கோரி கேரோ போராட்டம் நடத்தப்பட்டது.

கேரோ செய்தவர்கள் மீது போலீசார் தடியடி நடத்தினர் என்றும் இதனுல் சுமார் 12 பேர் காயமடைந்தனர் என்றும் மாநில மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் குற்றம் சாட்டினர்.

ஆனல் போலீசார் இதை மறுத்தனர். "ஆயுதம் தாங்கிய மார்க்சிஸ்ட் ஊழியர்கள்" போலீஸ் காவலை மீறி முன்னே செல்ல முயற்சித்தபோது அவர்கள் "பின்னுக்குத் தள்ளப்பட்டனர்" என்று போலீசார் கூறினர்.

மார்க்சிஸ்ட் ஊழியர்கள் ஊர்வலமாக வந்து இவ்விதம் முதல்வரின் வீட்டைச் சூழ்ந்து கொண்டனர்.

கேரோ போராட்டம் பல்வேறு மாவட்டங்களிலும் 22-ந் தேதி வரை நடைபெறும் என்று மார்க்சிஸ்ட் கட்சி அறிவித்துள்ளது.

# சிதம்பரத்தில் அண்ணா பிறந்த நாள்

சிதம்பரம், செ. 19—சிதம்பரத்தில் அண்ணா பிறந்த நாள் விழா நடைபெற்றது. தில்லை வில்லாளன் எம். பி. தலைமை வகித்தார். செல்வராஜ் எம். எல். ஏ. கொடி ஏற்றிவைத்தார்.

பின்னர் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில சட்டசபைத் தலைவர் கோ. துரைராசன் மற்றும்பலர் பேசினர்.

# ஜெமினிகணேசன்



## பேட்டி

தமிழ்த் திரையுலக மூவேந்தர்களில் ஒருவர், 'காதல் மன்னன்' என்று ரசிகர்களால் கொண்டாடப்பட்டு, 'புன்னகை'யுடன் குணச்சித்திர நடிப்பால் நிலையான புகழைப் பெற்று 'வெள்ளி விழா' கொண்டாடியவர் பத்மஸ்ரீ ஜெமினி கணேசன்.

பட்டதாரி நடிகர்கள் சிலருள் ஒருவரான அவர் எல்லோராலும் அன்புடன் "பிரதர்" என்று அழைக்கப்படுவதற்குக் காரணம் அவர் பழகும் விதம்தான்; உள்ளொன்று வைத்து புறமொன்று பேசாமல், நறுக்குத் தெறித்தாற்போல வெளிப்படையாக எந்தக் கருத்தை யும் ஒளியாமல் சொல்லிவிடுவது அவருக்குள்ள நல்ல குணம், இந்த நல்ல குணத்தால் சங்கடங்களும் வருவதுண்டு.

'நவமணி' திரை உலகம் பகுதிக்கு அவரது இல்லத்தில் பேட்டி கண்டேன். 3 மணி நேரம் சென்ற சுவையான தொய்வில்லா பல்வேறு பிரச்னைகள் பற்றி அவர் பேட்டிக்கு இடையில் விவாதத்தன்மை அவரது சிந்தனை ஆற்றலை வெளிப்படுத்தியது.

நூல் நிலையத்தில் நுழைந்து பயனுள்ள நூல்களை படித்தது போன்ற உணர்வை ஏற்படுத்தியது. இதனால் பேட்டியில் பாதிதான் அன்று முடிந்தது. மீதியை ஏவி.எம். படப்பிடிப்பு நிலையத்தில் 'மாணிக்கத் தொட்டில்' படப்பிடிப்பின்போது வைத்துக் கொண்டேன்:

ஒரு கலைஞனுக்கு நியாயமாகத் திறமையின் அடிப்படையில் கிடைக்க வேண்டிய புகழும், பாராட்டும் கூடக் கை நழுவிப் போனால்...?

அந்த அதிர்ஷ்டசாலி ஜெமினி கணேசனைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்!

## மனங்கவர்ந்த அரசியல் தலைவர்கள் யார்?

கலையுலக, குடும்ப வாழ்க்கை இவ்விரண்டையும் குறித்து உங்கள் கருத்தென்ன?

அது நடிப்பு! இது பிடிப்பு!

## ரசிகர் சங்கம் தேவையா?

சுவையான கேள்விகளுக்குஅவர் அளித்த விறுவிறுப்பான பதில்களை படித்துச் சுவையுங்கள்!—

கலையுலகில் கால் நூற்றாண்டு காலமாக இருந்து வருகின்ற நீங்கள் செய்துள்ள சாதனை என்ன?

இந்த 27 ஆண்டுகளாகத் தமிழ்த் திரைப்பட உலகில் விடாமல் கலைச்சேவை செய்துவருவதே ஒரு பெரிய ஆச்சரியம்! இந்த உண்மையை வேண்டுமானால் நீங்கள் ஒரு சாதனையாக எடுத்துக் கொள்ளுங்கள்.

தரமான தமிழ்ப் படங்களுக்குக்கூட தங்கப்பதக்கம் கிடைக்காமல் போவதேன்?

இந்தக் கேள்விக்கு என் பதில் 'புன்னகை'தான்!

நடிகர்கள் அரசியலில் ஈடுபடுவது குறித்து என்ன கருதுகிறீர்கள்?

தாராளமாக ஈடுபடலாம்; அது அவரவர் இஷ்டம்; சொந்த விருப்பு வெறுப்பைப் பொறுத்தது.

தாங்கள் ஏதோ அரசியல் கட்சியில் சேரப்போவதாகச் சொல்கிறார்களே?

இந்த நிமிடம் வரை அப்படி ஒரு எண்ணம் இல்லை. அப்புறம் எப்படியோ!

உங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கக்கூடியது — உங்களை வருந்தச்செய்வது எவை?

மகிழ்ச்சி அளிக்கக்கூடியது நன்றியுணர்ச்சி! வருத்தம் ஏற்படுவது மனதிற்கும் நாக்கிற்கும் தொடர்பு இல்லாமல் பேசுவோரைக் கண்டு!

"மாணிக்கத் தொட்டில்" படத்தில் கே. ஆர். விஜயா, ஜெமினி கணேசன்.



புதுமுகங்களுக்கு தாங்கள் கூற விரும்புவது என்ன?

நாங்களும் ஒரு காலத்தில் புதுமுகங்களாக வரவேற்கப்பட்டு, பொதுமக்களால்வாழ வைக்கப்பட்டவர்கள்தானே? அதுபோல இப்போதைய புதுமுகங்களும் வரவேற்கத் தக்கவர்களே! வாழ்த்தவேண்டியவர்களின் வாழ்த்தைப் பெறுங்கள் என்று அவர்களுக்கு நல்வாழ்த்துக் கூறுகிறேன்.

## அரசியல் கட்சியில் சேரப்போகிறீர்களா?

நடிகர், நடிகையர் பெயரால் ரசிகர் சங்கங்கள் தேவையா? இதனால் வீண் மோதல்கள்தான் ஏற்படுகின்றன என்கிறார்களே?

ரசனை என்பது கலையையும், கலைஞனையும் இணைந்து ரசிக்கத்தன்மையால் ரசிக மனப்பான்மையுடன் காதலிப்பது. காதல் இருந்தால் மோதலும் இருக்கும். ரசிகர்கள் சங்கம் வரவேற்கத் தக்கதுதான்; ஆனால், வெறியர்கள் சங்கங்கள், கலைக்கும், கலைஞர்களுக்கும், நல்ல கலா ரசிகத்தன்மைக்கும் பங்கம் விளைவிப்பவை.

உங்கள் மனங்கவர்ந்த அரசியல் தலைவர்கள் யார்?

காந்தி, நேரு, காமராஜ், அண்ணா, ராஜாஜி ஆகியோர்.

கலையுலகிற்கு அரசாங்கம் இன்னும் என்ன செய்ய வேண்டும் என்று எதிர் பார்க்கிறீர்கள்?

உடும்புவேண்டாம்; கை இருந்தால் போதும்.

உங்கள் வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சி?

சினிமாவில்சேர்ந்ததுதான்!

தமிழ்த் திரையுலகம் எங்கே செல்கிறது?

சந்திர மண்டலத்தை நோக்கி!

இப்போது நடித்துக் கொண்டிருக்கும் படங்களில் பிடித்தமான பாத்திரப்படைப்பு எந்தப் படத்தில் உள்ளது?

நான் அவனில்லை' படத்தில்!

'காதல் மன்னன்' என்று வர்ணிக்கப்பட்ட தாங்கள் இப்போது அதிகமாக வயதான வேடங்களில் வருவதற்கு காரணம் ஏதேனும் உண்டா?

காதல் முற்றிவிட்டது. (சிரித்தபடி கூறுகிறார்)

டைரக்டர் ஆகும் எண்ணம் உண்டா?

எண்ணம் உண்டு! திட்டம் கிடையாது. (என்று கூறியபடி அவர் மெல்லிய பாட்டு ஒன்றை முணுமுணுக்கிறார்)

இவ்வளவு இனிமையாக பாடுகின்ற நீங்கள் சொந்தக்குரலில் படங்களில் பாடினால் என்ன?

விஸ்வநாதன் கூட 'எப்படியாவது (என்னை) மாப்பிள்ளை படத்தில் பாடவைக்கப் போகிறேன்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்; எப்போது, எந்தப் படத்தில் என்று இப்போது சொல்லமுடியாது.

'நியூவேவ்' பற்றி உங்கள் கருத்தென்ன?

இது புதிய அலை. பலபேர் இதற்காக அலை அலை என்று அலைவதாகக் கேள்வி.

உங்கள் மகளுக்கு கலப்பு மணம் செய்து வைக்கத் தூண்டுகோலாக அமைந்தது என்ன?

நான் சொன்னதைச் செய்பவன்! நினைத்ததை முடிப்பவன்.

உங்கள் இலட்சியம் என்ன?

எதையும் அலட்சியப்படுத்தாதது

கலைஉலகம் எப்படி இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்? கலைஞர்கள் எப்படி இருக்க வேண்டும் என்று கருதுகிறீர்கள்? ரசிகர்களிடமிருந்து எதிர்பார்ப்பதென்ன?

## தமிழ்த் திரை உலகம் எங்கே செல்கிறது?

கலை உலகம்—கலை உலகமாக இருக்கக்கூடாது. கலர்ப் படம் வரலாம், கலப்படம் வரக்கூடாது;

கலைஞர்கள் கொலைஞர்கள் அல்ல. நடிப்பு திரையிலும் மேடையிலும் மட்டும் இருக்க வேண்டும்—வாழ்க்கையில் அல்ல.

ரசிகர்கள் பாரபட்சமற்ற நீதிபதிகள்! எங்களை வாழவைக்கும் தெய்வங்கள்—வெறியர்களும் வெத்து வேட்டுகளும் அல்ல. அப்படிப்பட்ட ரசிகப் பெருமக்களுக்கும் 'நவமணி' வாசகர்களுக்கும் என் வணக்கங்கள்;

குன்றாத இளமை, குணச்சித்திர நடிப்புத் திறமை; பண்புடன் பழகும் தன்மை இவைகளைக் கொண்ட ஜெமினி கணேசன் இரு கரங்களையும் இணைத்து வணங்குகிறார்.

அவர் கரங்கள் சேர்த்திருப்பது ஒரு புத்தகத்தை மூடி வைத்திருப்பதுபோல இருக்கிறது. நல்லதொரு புத்தகத்தைப் படித்தது போன்ற உணர்வோடு நானும் விடைபெறுகிறேன்.

பேட்டி!

நாகை தருமன்.

# திரை உலகம்



"ராமன் தம்பி லட்சுமணன்" படத்தில் ஜெயா.

## சிசுபாலன் படப்பிடிப்பு முடிந்தது

ஸ்ரீவிஜயா சனி ஆர்ட்ஸ் 'சிசுபாலன்' படப்பிடிப்பு முடிவடைந்தது. இரவும், பகலும் இடைவிடாமல் 15 நாட்களில் இப்படத்தின் படப்பிடிப்பு முடிந்திருக்கிறது.



கவர்ச்சியல்ல—பக்தி, என்கிறார் "ரோஷக்காரி" படத்தில் குமாரி பத்மினி.

## கல்யாணமாம் கல்யாணம்

கீதா சித்ரா பட நிறுவனத்தினர் "கல்யாணமாம் கல்யாணம்" என்ற பெயரில் படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர்.

ஜெய்சங்கர், நிர்மலா, ஜெய சித்ரா, மனோரமா, கே. ஏ. தங்கவேலு, சோ, தேங்காய் சீனிவாசன், ஸ்ரீகாந்த், வி. எஸ். ராகவன், ராமதாஸ், ரிச்சர்ட், குள்ளமணி ஆகியோர் நடிக்கின்றனர்.

பஞ்சு அருணாசலம் கதை வசனம் எழுதுகிறார். கன்னடப் படவுலகில் சிறந்த இசையமைப்பாளராக விளங்கும் விஜய பாஸ்கர் இசையமைக்கிறார்.

'மரகதம்' கிருஷ்ணமூர்த்தி டைரக்ட் செய்கிறார். கே. பாலகிருஷ்ணன், காமாட்சி, மாணிக்கம், மூவரும் கூட்டாகத் தயாரிக்கின்றனர்

## ரகசியம்



பரமரகசியம்

அண்மையில் வெளிவந்த படம் ஒன்றில் வெகுநாட்களுக்குப்பின் நடித்துள்ள ஒரு கவர்ந்த நடிகையின் பெயர் டைட்டிலில் காட்டப்படவில்லை; பாட்டுப் புத்தகத்திலும் காணோம், அதன் காரணம் கையில் வேலைகொண்ட அந்தக் கடவுளுக்குத்தான் வெளிச்சம்!

ஃ ஃ ஃ

மணியிடைப் பிறந்த பரம்பரை நடிகையை இந்திப் படங்களில் நடிக்க இரு கரம் நீட்டி தயாரிப்பாளர்கள் வரவேற்கின்றனராம்.

'தமிழ்ப்பட உலகில் உள்ள பண்பை அங்கே எதிர்பார்க்க முடியாது. இங்கே நடிப்பது போதும்' என்கிறார் அந்த செல்வநாயகி!

ஃ ஃ ஃ

காதல் மன்னன் பெயருக்குமுன் இணைத்துக்கொண்டுள்ளவகதாநாயக நடிகர் மலையாளப் படங்களைப் பற்றி தயாரிப்பாளர்கள், டைரக்டர்கள் மத்தியில் கடுமையாகத் தாக்கிப் பேசினாராம்.

"தாயை மகன் கெடுப்பது போல படம் எடுப்பதுதான் புதுமையா? புரட்சியா?" என்று கேவலமாகக் கூறினாராம்;

'நியூவேவ்' தயாரிப்பாளர்கள் டைரக்டர்கள் முகத்தில் ஈயாடவில்லையாம்!

## இன்றைய சினிமா

சென்னை

| | |
|---|---|
| காஸினோ | ஒளிவிளக்கு |
| காமதேனு | ஸ்கூல் மாஸ்டர் |
| சாரஸ் | Craturesthe world forgot |
| நியூ எல்பின்ஸ்டன் | Ladies Hostel |
| நேஷனல் | பாரத விலாஸ் |
| ராம் | தெய்வக் குழந்தைகள் |

தாம்பரம்

| | |
|---|---|
| எம். ஆர். தியேட்டர் | சூரியகாந்தி |
| ஸ்ரீசித்ரா | உலகம் சுற்றும் வாலிபன் |
| நேஷனல் | Super man |

குரோம்பேட்டை

| | |
|---|---|
| வெற்றி | வீட்டுக்கு வந்த மருமகள் |

வில்லிவாக்கம்

| | |
|---|---|
| ராயல் | தெய்வக் குழந்தைகள் |

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P.P.S. Press, No. 4 South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd..

Chief Editor:
S. V. G. Sowrirajulu
Honorary Editor:
N. Muthukumarasamy



## வீட்டுக்கு வந்த மருமகள்

(விமர்சனம்)

தன் சுயநலத்திற்கு யாரையும் பயன்படுத்திக் கொள்ளும் அகந்தையும், அந்தஸ்து வெறியும் கொண்ட பணக்காரி புவனேஸ்வரி; கணவனையே மதியாது எடுத்தெறிந்துபேசும்அவளதுமகள் கங்கா! குழந்தைகளின் பாசத்திற்கும், தொழிலாளர்களின் அன்பிற்கும் கட்டுப்பட்டு அந்த வீட்டுக்கு மருமகனாக அடிமைபோல வாழும் மாணிக்கம்; இவர்களை அடித்தளமாக வைத்து கதை தொடங்குகிறது.

தொழிலாளர்களுக்காக மாமியாரிடம் வாதாடி அதன் பலனாக மாணிக்கம் வீட்டைவிட்டு வெளியேறுகிறான். பிள்ளைப்பாசம் அவனைப் பைத்தியக்காரனாக்குகிறது; அவனது பிள்ளைகள் வளர்கிறார்கள். வீட்டுக்கு வந்த மருமகளும், பேரப்பிள்ளையும் பணக்காரப் பாட்டியின் கொட்டத்தை அடக்குகிறார்கள்;

இது கதை!

ராஜனின் நடிப்பில் உருக்கம் அதிகம்!

தான் பெற்ற குழந்தையே தன்னைப் பெயரைச் சொல்லி கூப்பிடுவதைக் கண்டு வேதனைப்படும்போதும், பிச்சைக்காரன் என்று எண்ணி தன் மகள் கொண்டுவந்து போட்ட உணவை வைக்கும்படி பாசத்தால் கண்ணீர் மல்க பார்க்கும்போதும் அவரது நடிப்பு பிரகாசிக்கிறது.

ரவிச்சந்திரன் மெழுகு பொம்மைப் போல அழகாக உள்ள லதாவுடன் கட்டிப் பிடித்து காதல் புரிகிறார். நடிப்பதற்குக் கிடைத்த சந்தர்ப்பங்களை அவர் நழுவ விட்டுவிடவில்லை.

லதாவின் நடிப்பு சேரிப் பெண்ணாக வரும் கட்டங்களில் (சண்டைக்காட்சி தவிர) எடுபடுகிறது.

நிர்மலா முத்துராமனை காதலித்து மணந்துகொண்டு வாடுகிறார்—கண்ணீர் விடுகிறார்! கொடுத்த பாகத்திற்கேற்ற அளவான நடிப்பு!

சந்திரகாந்தாவை நீண்ட நாட்களுக்குப் பின் இந்தப் படத்தில சந்திக்கிறோம்: மனதில் நிற்கும்படி நன்றாக நடித்திருக்கிறார்.

சோவும், மனோரமாவும் பொருத்தமாக நடித்து கலகலப்பூட்டுகின்றனர். கவுரவ நடிகர்களான முத்துராமன், வி. எஸ். ராகவன், தேங்காய்சீனிவாசன், நடிகை எம். என். ராஜம் ஆகியோர் நடிப்பு எப்போதும்போல் தரமாக உள்ளது.

செல்வ செருக்குள்ள மாமியாராக அமர்க்களமாக நடித்துள்ளார் ஜி. வரலட்சுமி

'குருவி கூடு கட்ட ஆசைப்படலாம்; வீடுகட்ட ஆசைப்படக்கூடாது' என்பது போன்ற கருத்துள்ள வசனங்களை எழுதியுள்ளவர் ஏ. எல். நாராயணனும், அய்யாப் பிள்ளையும்.

'சம்பந்தி வீட்டம்மா' பாடல் தாளம் போடவைக்கிறது.

கண்ணதாசன் பாடல்களுக்கு சங்கர்கணேஷ் இசையமைத்துள்ளனர்.

வழக்கமான கதை என்றாலும் அதைப் பார்க்கும்படி விறுவிறுப்பாக புதிய டைரக்டர் விட்டல்இயக்கியுள்ளார்.

சுப்பிரமணிய ரெட்டியார் பெண்களுக்கேற்ற வகையில் கதை எழுதி படத்தைத்தயாரித்திருக்கிறார்; மொத்தத்தில்!

'வீட்டுக்கு வந்த மருமகள்' பெண்களைக் கவருவாள்.